## நடு நிசி நாய்கள்

இந் நடு நிசி நாய்கள்
இருள் விழுங்குகையில்
தொண்டையில் சிக்கிக்
கத்திச் சாகின்றன.

தரை வெளுத்ததும்
பாதையோரம்
குனிந்த தலை குனிந்தபடி
மோப்பக் காற்றில் தூசி பறக்க,
சாத்தின ஏவல போல,
பனித மலங்கள்
தேடித் திரிகின்றன.

கறுப்பு விதை காட்டி,
புட்டி சிறுத்துக் குலுங்க,
வெட்கம் கெட்டுத் திரியும்
இந் நடு நிசி நாய்களுக்கு
ஒய்வில்லை; ஊறக்கமும் ஒய்வாக இல்லை.

கை உயர்த்திப் பாசாங்கு காட்டும்
பள்ளிச் சிறுவனிடம் பயங்கொண்டு,
இந் நடு நிசி நாய்கள்,
பின்னங் காலிடை நுழையும் வாலை
வாய் கொண்டு பற்றி இழுத்து
பயங்கொண்டு வால் தின்று சாகின்றன.

முற்பகலில் மனம் மூட்டமடைய,
நினைவுகளால் துக்கம் தேக்கி,
சிறிது வலுச் சண்டை கிளப்பி
கடித்துக் குதறி,
ரத்தம் கண்டு ஆசுவாசம் கொள்கின்றன.

பிற்பகல் ஒளி வெள்ளம்
பார்வையைத் தாக்க,
இலைகளின் நிழல்கள் முதுகில் அசைய
சற்றே கண் மயங்கிக் கிடக்கின்றன.

மாலையில் கண் விழித்து
நாற் திசையும் பார்வை திருப்பி
உறக்கத்தில் சுழன்ற உலகம மதித்து
எழுந்து சோம்பல் முறித்து, நீட்டி
நிமிர்ந்து,

தேக்கிய சிறுநீர்
கம்பந்தோறும் சிறுகக் கழித்து,
ஈக்கள் மேல் வட்டமிட்டுப் பின் தொடர
மாலை நடை செல்கின்றன.

அந்தியில் புணர்ச்சி இன்பம்
(ஒரு தடவை அல்லது இரு தடவை)

மீண்டும் நடு நிசியில் இருள் விழுங்கித்
தொண்டை சிககக் கத்தல்.

பசுவய்யா

## காற்று

காற்று கதவைத் தட்டும்;
முட்டும்;
தாளிட்டதில்லை.

ஒருக்களித்த கதவுகள் மீது
ஆங்காரம் கொள்ளும்.
'திற' அலலது 'மூடு'
எனக் கத்தும்.

எனினும் தூசி போர்த்தும்;
நெருகிலும் பரப்பும்.

எனது பெயர்
'உக்கிரப் பெருவழுதி'
எனக் கூறிச் செல்லும்.

சருகு உதிர்க்கும்
எனினும் தளிர் ஒடிக்கும்.

மூட ஜென்மம்.

எனினும் குருவிகளை முத்தமிடும்
அதிருஷ்டம் கொண்டது.

பசுவய்யா

## காலம்

என் கால்கள் நடந்த தெரு
ஒரு பரத்தையாய் மாறிவிட்டது
குச்சு வீடுகள்
செங்கற்களை ஒளித்துக் கொண்டு
சுண்ணாம்பில் மினுக்குகின்றன
மறைக்கும் கோவணச் சுவர்கள்
உரத்து அழைப்பை விடுக்கின்றன
பேடித் தலைவர்கள்
பிறந்தநாள் மாலை, கிரீடம்,
புன் சிரிப்புடன்
மக்களை ஏளனம் செய்கின்றனர்
போலி உலகப் படங்களின்
விளம்பரங்களோடு.
கட்டை விரலை முட்டி, ரத்தம் கசிய
முத்தம் கொடுத்த கற்கள்
மண்ணுள் மறைந்து விட்டன.
நான்
நடந்த தெரு மண்
இன்று,
எனக்கு முன்னும் பின்னும்
பிறந்த மனித விலங்குகள்
வாகனங்களால் அரைபட்டு
முகப்பூச்சு சுண்ணாம்பென
மிருதுவாய் மாறிவிட்டது
தெருவில் மனிதர் கால்களை
மட்டும அடுக்கி நான நடக்கிறேன்
விஷக்காற்றை உறிஞ்சிக்கொண்டு.

ஆத்மாநாம்

# வழி தவறிய உலகம்

யூஜீன் அயனெஸ்கோ

சென்ற நூற்றாண்டில் மனிதர்களால் தங்கள் கதியையும் வரலாற்றின் எதிர்காலப் போக்குகளையும் முன் கூட்டி உணர முடிந்தது. ஆனால் அதன்பின் அவர்கள் நிர்மாணித்த யாவுமே பலவீனமாகிவிட்டன. விடுதலைக்காகவும் நீதிக்காகவும் விடுதலை—நீதியின் பெயரால் மேற்கொள்ளப்பட்ட புரட்சிகள் யாவும் கொடுங்கோன்மையிலும் நரகத்திலும் முடிந்திருக்கின்றன. மாறாக, மனிதர்கள் பொருளாதாரப் பிரச்னைகள் தொழில் அபிவிருத்தியால் தீர்ந்துவிடும் என்று எதிர்பார்த்தார்கள். எல்லோருக்கும் நல்வாழ்வு என்பதே எல்லாருடைய பொது எதிர்பார்ப்பாயிருந்தது.

இன்று மனிதகுலம் முழுதும் வாழ்க்கையின் துன்பங்கள்—அல்லது நடப்புக் கால வாழ்க்கையின் துன்பங்கள் பற்றி உணர்வு பெற்றிருக்கிறது. மாறுபட்ட அரசியல் கொள்கைக்காரர்களும் கூட ஒத்துழைக்க முற்பட்டிருக்கிறார்கள்; அரசியலையே வெறுப்பவர்கள் கூட மனிதகுலத்தின் முடிவுக்காக, கொடுமையும் வன்செயலும் மிக்க உலகில் தங்களின் தற்கொலைக்காகப் பச்சாத்தாபப் படுகிறார்கள். ஒவ்வொருவரும் பிறரைப் பார்த்து பயந்து கொண்டிருக்கிறார்கள்.

“உலகம் ஊழல் நிறைந்தது, அசிங்கமானது, மரணமுள்ளது—ஆகவே அது அழிக்கப்பட வேண்டும்” என்றான் அன்டோனின் அர்டாட். ஸ்டரின்பர்க், “நான் மனிதனை வெறுக்கவில்லை—அஞ்சுகிறேன்” என்றார்!

இப்பொழுதும் கூட, குறிப்பாக இளைஞரிடையே, சில புத்திசாலிகள் இருக்கிறார்கள், விரக்தியடையாமல், அபாயத்தை எதிர்நோக்கி. அவர்கள் உலக சமுதாய மனசாட்சிக்கு, சர்வநாசத்தைத் தடுக்கும்படி, நிறுத்தும்படி வேண்டுதல் விட்டபடி இருக்கிறார்கள். ஆனால் உலக மனசாட்சி தூங்குகிறது! இனிப் பின்வாங்கிப் பயனில்லை. அழிக்கும் சக்திமிக்க ஆயுதங்களும், நிலம்—நீர்—காற்றைக் கெடுத்துவிடும் கணக்கற்ற பொருட்களும் பெருகி, எல்லாவற்றையும் ஒழித்துவிடத்தான் போகின்றன.

மனிதன் தன்னைத்தானே மாய்த்துக் கொள்ள நினையாதிருப்பானாகில் எல்லாமே வேறு மாதிரி இருந்திருக்கும். படுகொலையும்—சுரண்டலும் இருந்திராது. ஏனிப்படி ஆகிவிட்டது? டாஸ்டாவெஸ்கியின் அறிவிலி (இடியட்) கேட்டானே பொருள்மிக்க கேள்வி: “நாம் ஏன் ஒருவரை ஒருவர் நேசிப்பதில்லை?” என்று! வாஸ்தவம். நாம் ஏன் ஒருவரை ஒருவர் நேசிப்பதில்லை? அல்லது பரஸ்பரம் அலக்ஷ்யமாகவாவது இருந்துவிடலாம் அல்லவா?—“கண்டு” கொள்ளாமல்? என் நண்பர் ஒருவர் சொன்னார்; “மனிதனின் ஸாகஸம் அளவு மீறிவிட்டது. ஒரு முற்றுப் புள்ளி வைத்தாக வேண்டும்”.

ஆசைகளனைத்திலிருந்தும் விடுவிப்பதாகச் சொல்லப்படும் பூர்ஷ்வா எதிர்ப்பு என்பதானது இப்போது மிகவும் “நாகரிக”மாகத் தோன்றும் தத்துவங்களால் நியாயப் படுத்தப்பட்டாலும், முடிவில் சர்வநாசம், கலாசாரக் கேடு இவற்றில்தான் முடியும். ஆனால் ஒரு கடைசிப் பட்சமாக, இந்தக் “கலாசாரம்” தான் என்ன? நம்மைப்பற்றி நமது துயரங்களைப்பற்றிய பயங்களிலிருந்து, வெறுப்பிலிருந்து, ஆற்றாமையிலிருந்து, இன்னும் சாவிலிருந்து நம்மையே காக்கும் ஒரு திரையைத் தவிர வேறன்று “கலாசாரம்”. நம்முடைய வாழ்வின் பளுவை எந்த அளவுக்குத்தான் ஓவியங்களோ, இசை நாடகங்களோ, நாவல்களோ, நாடகங்களோ, தர்மோபதேச(ங்களோ) வியாக்யானங்களோ, கணக்கற்ற இசைப் பாடல்களோ குறைத்துவிட முடியும்?

எவ்வகையான சமுதாய அமைப்பும் நம்மைத் திருப்தி செய்துவிட முடியாது. இடதுசாரியோ, வலதுசாரியோ யாவும் வெறுக்கத்தக்கனவே. ஆர்ப்பாட்டமான சுலோகங்கள் மூலமும், பகட்டான பிரசாரம் மூலமும் பொதுஜனக் கருத்தை மழுங்கடித்து, அமுக்கிவிடும் சர்வாதிகாரிகள் இன்னும் உள்ளனர். எதற்குமே பாதுகாப்பான அடிப்படை இல்லை. மதங்கள் பலமற்றுப் போய்விட்டன. அவற்றால் ஆறுதலுமில்லை, அறிவு விளக்கமும் இல்லை. அவைகளிடம் விடைகள் இல்லை, தீர்வுகளுமில்லை. எல்லாம் தீர்ந்துவிட்டது. இனிப் புகல் இல்லை எங்கும். நமது ஆசாமிகளின் பார்வைகளிலும் புத்தகங்களிலும் நம்முடைய தரங்கெட்ட தன்மையே காணப்படுகிறது. ஒரே வார்த்தைபோதும், மக்கள் முன்னாலே ஓடி வருவார்கள் அல்லது தங்களையே மாய்த்துக் கொள்வார்கள். ஒரு பொறிபோதும் உலகம் பூரா சுவாலை மூள. மார்க்ஸியவாதியோ, சைகோ அனலிஸ்டோ, ஃப்ராய்ட் எதிர்ப்பு (அ) நீயட்சே ஆதரவாளரோ, எவராயினும் ஒவ்வொரு தத்துவவாதியையும் ஒரே கேள்விதான் எதிர்நோக்கியுள்ளது. நாம் எப்படி வாழவேண்டும்? வாழ, எதிலிருந்து விடுபட வேண்டும்? நமது உணர்வுகளிலிருந்தா? தடைகளிலிருந்தா? புரட்சியிலிருந்தா? மறுபுரட்சியிலிருந்தா? தடைச்சங்கிலிகளை உடைக்கவா (அ) பலப்படுத்த வேண்டுமா? வாழ்க்

கையின் தாகங்கள், தணிக்கப்படாத ஆசைகள், ஆசைகளைக் கட்டுப்படுத்தும் கட்டுப்பாடு, இவற்றை இனியும் சமனில் வைக்க முடியுமா? உணர்ச்சிகள் ஒன்றோடொன்று மோதுகின்றன. கிழக்கு—மேற்கு ஏகாதிபத்தியங்கள் எந்தத் தத்துவத்திலும் கோட்பாட்டிலும் அடங்கா வன்முறையில் உலகை ஆழ்த்துகின்றன.

ஏழைகட்கு உதவுவது, நீதியை நிறுவுவது, பசி தீர்ப்பது, வேட்கை தணிப்பது, இவை மனிதர் தேடும் லட்சியங்களில்லை. அவர்களின் தேவையே வேறு உலகத்தைக் கட்டுப் படுத்துவது (அ) ரத்தக் குளியல். சர்வாதிகார சர்க்கார்கள் மிகக் கடுமையான பூர்ஷ்வா நிர்வாகங்களை நிறுவுவதில் மட்டுமே வெற்றி கண்டுள்ளன என்பதை நாம் நெடு நாட்களாகவே அறிந்துள்ளோம். அவர்களுக்குத் தெரிந்தாலும் தெரியாவிட்டாலும், அவர்கள் ஏற்றாலும் மறுத்தாலும், இளம் பூர்ஷ்வாக்களும், பூர்ஷ்வா எதிரிகளும்கூட இதே பாதையில்தான் போகிறார்கள். ஒருவேளை, மேல்நாட்டுச் சமூகம் மிகவும் 'மென்மை'யாகிவிட்டதால் இவர்கள் போலீஸ் மற்றும் "பிகு" தளராத மூத்தோர் கூடிய இறுக்கமான பூர்ஷ்வா அமைப்புகளையே விரும்பக்கூடும்.

நமது அதீத அரசியல் நடவடிக்கைகளுக்கு நமது ஏமாற்றங்களே கூடக் காரணமாகலாம். சங்கீதமும் இலக்கியமும் தராததை அரசியல் தரலாம் என்றும் கூடச் சிலர் நினைக்கக் கூடும். ஆனால் அரசியல் மனித சமூகத்தின் (தாக்குறைவை) அழிவையே சாதிக்கும். மனிதனை மனிதன் சுரண்டுவது இப்போதைய முக்கியப்பிரச்னை அன்று. மாறாக மனிதனை மனிதன் ஆளவேண்டும் எனும் ஆழமான ஆசையே முக்கியமாகிவிட்டது! சிலருக்குப் பலர் அடிமையாயிருப்பதே நம் காலத்துப் பிரச்னை. இது "அதிகார ஆசை" எனும் மிக மோசமான மனநோயின் விளைவாகும். உலகின் எல்லா மூலைகளிலும் அதிகார வெறி பிடித்தோர் கோடிக்கணக்கான மக்களின் மீது அடிமைத்தன நுகத்தடியைச் சுமத்துகின்றனர். கொடுங்கோலர்களும் சர்வாதிகாரிகளும் நிபந்திக்கும் — கோட்பாடுகளையோ (அ) புரட்டுகளையோ ஒப்புக்கொள்ள மறுக்கும் கோடிக்கணக்கானவர்களின் உயிர்கள் அச்சுறுத்தப்படுகின்றன. புதுமதக்கோட்பாடுகள்—கேள்விகளும் அறிவீனமான பதில்களும்—படித்து கிரகிக்கப் படவேண்டும்.

இன்றைய இளைஞர் எல்லா ஆசைகட்குமான தடையற்ற முன்னேற்றம், மீற முடியாத ஒரு கட்டளை இரண்டின் நடுவிலும் நோக்கமில்லாமல் ஊசலாடுவதாகச் சொன்னால் முரணாகாது. நமக்கு எது அவசியம், நம்மை நடத்திச் செல்வது எது என நமக்குத் தெரியவில்லை. பகுத்தறிவின்மை அறிவை மறைக்கிறது. ஒன்றோடொன்று முரண்பட்ட பலவற்றை ஒரே சமயம் அடையக்கூட நாம் முயல்கிறோம் போலும்! விரைவிலேயே புரட்சியின் இருநூறாவது ஆண்டை நாம் காணப் போகிறோம். புரட்சிகளும் தொடரும். புரட்சிகளின் புரட்டும் பயனின்மையும் வேறுமாதிரி இருப்பினும், புரட்சியின் புனர்ஜனன மாயத்துக்கு மனிதகுலம் தொடர்ந்து இரையாகும். நடைமுறை வரலாறு இதைப் பலமுறை காட்டுகிறது. அரசியல் மானிடர்கள் மனிதர்களை நேசிப்பதில்லை, கருவிகளாக, சாதனங்களாகப் பயன்படுத்துகிறார்கள். அவர்களோடு நட்புறவில் சமரசம் செய்துகொள்ளவேண்டும் என நான் சொல்வேனாகில் மக்கள் என்னைப் பார்த்துச் சிரிப்பார்கள். இது இயற்கையே. ஏனெனில் இவ்விருவருக்குமுள்ள உறவு, பலத்தைப் பொறுத்தது. ஆனால், புரட்சிவாதியின் நம்பிக்கை நாடிகளாக நட்பு, சகோதரத்வம், தோழமை, ஒருமை, சம்மதம் சுதந்திரம், சமத்வம்—இல்லையா, இருந்ததில்லையா?

என்னால் புரட்சிகளின் சுலோகங்கள், கோட்பாடுகள். கொள்கைகளைத் தீவிரமாக ஏற்றுக் கொள்ளமுடியவில்லை. நான் புரட்சியை மட்டும் எப்படி ஒப்புக்கொள்வேன்? நட்பையும் தோழமையையும் புகுத்தவோ (அ) நிலை நிறுத்தவோ முடியாத புரட்சிகளை நான் எப்படி நம்ப முடியும்? இதைச் செய்யக்கூட அந்தப் புரட்சிகள் முயற்சி எடுக்கவில்லையே! ஒரு புரட்சி சற்று நிலைத்ததும் தண்டனை, பிராயச்சித்தம், பழி வாங்குவது பற்றித்தான் நினைக்கிறது. அன்பின் பேரிலோ (அ) அன்புக்காகவோ புரட்சிகள் நடைபெறுவதில்லை. அரசியலால் அமுக்கப்பட்டுவிட்டிருக்கும் கொள்கைகளில் "நட்பு"ம் ஒன்று.

அன்பும் சிந்தனையும் முட்டாள்தனமான கருத்துக்களல்ல — இந்தக் கருத்துக்களே இப்போதுஇல்லை. அடிப்படை சத்தியம்பற்றிய குறிப்பே, சினம் இல்லாவிட்டாலும் இளக்காரமான பொறுப்பையாவது கிளப்புகிறது.

நம்மால் இப்போதெல்லாம் பார்க்கமுடிவதில்லை. பொது ஆரவாரத்திலிருந்து ஒரு நிமிடம் ஒதுங்கி, அந்த ஆரவாரம் பற்றியே அமைதியாகச் சிந்திக்க முடிவதில்லை. நமது உலகத்தின் அண்மையை (அ) தொலைவைப் பார்க்க முடிவதில்லை. எனினும், நாம் உள்ளபடி நம்மைச் சுற்றியும், மேலும், நம்முள்ளும் சற்றுப்பார்ப்போமானால், மறுபடியும் படைத்த நாள் போன்ற புதுமையான, இளைய உலகை ஒரு குழந்தைக்குரிய வியப்போடு நம்மால் காணமுடியும்.

Encounter, Nov '72
தமிழில்: தீபப்ரகாசன்

# கவிதையின் கதை

எஸ். வைதீஸ்வரன்

புதுக்கவிதை தன் வாழ்வுக்கு எதிர் நீச்சல் போட்ட காலம் இப்போது மலையேறி விட்டது. சுமார் 15 ஆண்டுகளுக்கு முன் தீண்டத் தகாத ஒரு நசிவு இலக்கியமாக, அதர்வண வேதத்தைப் போல மர்மமான, அசூயையுடன் பார்க்கப்பட்ட இந்தப் புதுக் கவிதைப் படைப்புகள், இன்று மிக 'சுகமான பிரசவங்களாக'ப் பிறந்து, இன்றைய பல பத்திரிகைகளால், பொய்யும் மெய்யுமான பல வித உத்தேசங்களுக்காக, தொட்டில் ஆட்டப் படுகின்றன.

இந்தப் புதுக் கவிதை முயற்சியில், தீவிரமான அக்கறையும், கணிப்பும் கொண்ட பத்திரிகைகள் விலக்காக, இதை நம்புவதுதான் 'சௌகரியம்' என சில பத்திரிகைகளும், இதை நம்புவது இன்றைய 'நாகரிகம்' (like sideburns) என சில பத்திரிகைகளும், நம்புவது போல் நடிப்பதில்தான் முற்போக்கு பிரமையளிக்கும் என சில பத்திரிகைகளும தமிழ்நாட்டில் மலிந்திருக்கின்றன. சில பத்திரிகைகளுக்குத் தங்கள் 'அன்றாட' அரசியல் கொள்கைகளைப் பொட்டலம் கட்டி வினியோகம் செய்ய, இக்கவிதை வடிவங்கள் மிக சௌகரியமாகப் பயன்படுகின்றன. இதையெழுதும்போது என் மனக்கண்ணின் முன், தமிழ்நாட்டில் மூலைக்கு மூலை கவிதைத் தொழிற்சாலைகள் திறக்கப்பட்டு, அங்கே ராட்சஸப் பேனாக்கள் அல்லும் பகலும் அவசரக் கவிதைகள் எழுதி முடித்து, ஓயாமல் வெளியேற்றிக் கொண்டிருப்பதுபோல் பிரமை தோன்றுகிறது. "This has become a field of terrible competition. Sir!" என்று ஒரு சக கவிஞர் சொன்ன வரிகளும் எனக்கு நினைவுக்கு வருகிறது. அப்படி போட்டி போட்டுக் கொண்டு ஏன் 'கவிதை' எழுத வேண்டும்?

15 வருடங்களுக்கு முன், இரண்டு மூன்று தெருவுக்குள் உலவிக் கொண்டிருந்த சிலரின் தனி முயற்சிகள், இன்று இப்படி பலமுகம் கட்டிக் கொண்டு, பொது மேடைக்கு வந்துவிட்ட நிலையை புதுக் கவிதையின் வெற்றி என்று ஒரு அர்த்தத்திலும், தோல்வி என்று இன்னொரு பார்வையிலும் கூற முடியும். சமூகத்தின் எந்த அடிப்படையான அவசியம், இந்தக் கவிதைத் துறையைப் பிரபலமாக வரவேற்க வேண்டுமென்ற ஆசையைப் பலருக்கும் ஒரே சமயத்தில் ஏற்படுத்தியது என்று தீர யோசனை செய்ய வேண்டியது, இன்றைய வளரும் கவிஞர்களுக்கு நல்லது.

ஏனென்றால், இன்று பொங்கிவரும் வெள்ளக் கவிதைகளைப் பார்க்கும்போது, இன்றைய பத்திரிகைகள், புதுக் கவிஞர்களைத் தவறான உற்சாகத்தினால் கவிதை எழுதத் தூண்டக்கூடும் என்று தோன்றுகின்றது. ஒருகவிஞனுக்குக் கவிதையெழுதக்கூடிய உற்சாகம், தன் சுற்றிலுமுள்ள உலகத்தினால், தன் புலன்கள் வழி பாதித்த நினைவுகளால், உணர்வுகளால் ஏற்பட வேண்டும் என்ற உண்மை புதிதல்ல. இருந்தும், சபலங்கள் நிறைந்த, தேட்டத்தில் தீவிரமில்லாத இளங்கவிஞர்களுக்கு, இன்றைய பத்திரிகைகளின் திறந்த நோக்கமற்ற கரங்களும், அவைகள் பிரசுரிக்கும் 'நானாவிதக்' கவிதைகளும், ஒரு தவறான உற்சாகத்தை ஏற்படுத்தக்கூடும். பிரசுரமாவதெல்லாம் கவிதை என்ற பொய் மதிப்பீடு, தானறியாமலே கண் வழி புகுந்து தனக்குள் ஒரு பிரமையை, ஆசையை உண்டாக்கலாம். கவிதைகளை வாழ்க்கையில் தேடுவதற்குப் பதில், பத்திரிகைகளிலேயே தேடத் தோன்றலாம். ஒரு கவிதையாகும் ஆச்சரியங்கள் வறண்டுபோய், 'இரவல் உணர்ச்சிகளால்' கவிதைகள் படைப்பது சௌகரியமாகத் தோன்றலாம்.

இதனால் தரக்குறைவான, ஒரே மாதிரியான உணர்வு ஸ்தாயிகளும், முத்தாய்ப்புகளும் கொண்ட வார்த்தைக் கோர்வைகள், கவிதைகளென மலிந்து, வாசகர்களிடையே பல பொய் மதிப்பீடுகளை ஏற்படுத்துகின்றன. வளரும் கவிஞர்களுக்கு ஒரு தப்பான ஆதர்சங்களாக அமைகின்றன. இந்நிலையைச் சுட்டி, இயக்கத்தை ஆக்க பூர்வமான திசைக்குத் திருப்பும் விமர்சனக் கூர்மையற்ற இந்த நேரத்தில், விழித்துக் கொள்ள வேண்டியது, அற்ப சபலங்கள் அற்ற, பரந்த மனம் கொண்ட கவிஞர்கள்தான்—அடிக்கடி தங்கள் படைப்புகளைப் பற்றிய பாரபட்சமற்ற கணிப்புகளாலும், "எது, ஏன் கவிதையாவதில்லை?" என்ற தீராத கேள்விகளினாலும் தான், படைப்புகளைப் புதுப்பித்துக்கொள்ள முடியும்.

புதிய புதிய வெவ்வேறு சாத்தியங்கள் காட்டும் நல்ல கவிதைகள், பத்திரிகைகளில் தென்படுவதால் (எந்தப் பத்திரிகையானாலும் சரி) அது தேர்ந்த வாசகர்களை நல்ல விதத்தில் தான் பாதிக்கும்.

நோக்கமற்ற, நோக்கங்கள் தெரியாத பத்திரிகைகளைத் தார்மீகக் கோபத்தினால்

நிராகரித்துப் பொசுக்கித் தன் படைப்புகளைத் தனக்குள் சுருக்கிக் கொள்வதால் நஷ்டம தனக்கு ஏற்படாமலிருக்கலாம். பத்திரிகையும் இதைப்பற்றிக் கவலைப்படாமலிருக்கலாம். ஆனாலும் இது தவிர்க்கக் கூடிய ஒரு கலை நஷ்டம் என்றே நான் நினைக்கிறேன்.

பத்துப் பதினைந்து ஆண்டுகளுக்குமுன்பு, தமிழ்க் கவிதையை அதன் மரபு வடிவங்களிலிருந்து விடுதலை செய்வதுதான், அநேக புதுக் கவிஞர்களின் நோக்கமாக இருந்தது. வெண்பாக்களும், அகவலும், விருத்தமும் கவிதையைச் சாகடிக்கக் கற்பனைசெய்த பொறிகளாக எண்ணப்பட்டு வந்தது. இந்த வடிவங்களில் எழுதப்பட்ட தேசபக்திப் பாடல்களும், கடவுள் தோத்திரங்களும், சரித்திரப் பாடல்களும் தமிழ்க் கவிதைகளின் சவலைப் படைப்புகளாக எடுத்துக் காட்டப்பட்டன. இப்போது அந்த ஆரம்பப் புதுக்கவிதைகளைத் திரும்பி கணித்துப் பார்க்கும்போது அந்தக் கவிதைகளின் வெற்றிகள், வெறும் வடிவப் புறக் கணிப்பால் மட்டும் நேர்ந்து விடவில்லை என்று நிச்சயமாகிறது. எதிர் காலத்தில் இன்னும் எவ்வளவு விபரீதமான வடிவப் புரட்சிகள் செய்தாலும், அந்தப் புதுமையை ஜீரணித்துக் கொண்டு கவிதை படைக்க, கவிஞனால்தான் சாத்தியமாகும். புதுக்கவிதையின் சிறப்பான லட்சணங்களைப் பற்றி கவிஞர்கள் அனுபவப்பூர்வமாகச்சொன்னதையும், அதை இன்னும் பல கவிஞர்கள் பக்தியுடன் திருப்பிச் சொல்வதையும் நாம் அடிக்கடி கேட்டுக் கொண்டிருக்கிறோம்.

எண்ணத்தை அதன் பிறப்பிடத்திலே பிடித்துவிடுவது புதுக்கவிதை என்கிறார் ஒருவர். மொழியின் உள் சக்தி முழுவதையும் கண்டறிந்துவெளிப்படுத்துவதும் அவைகளின் விபரீதமான அபூர்வமான (விபரீதமா)சேர்க்கையில் மொழியின் இயல்புக்கு மீறிய அர்த்த சாத்தியங்களை இறுக்கமாக எழுப்பிக் காட்டுவது புதுக் கவிதையால்தான் முடியும் என்கிறார் ஒருவர். உலகப் பொருளின் மேல், தன் குறுகிய சுய பிரலாபங்களை ஏற்றாமல், பொருளைப் பொருளாகக்கவிதை பண்ணுவதன்மூலம் தான் உண்மையைச் சிதறாமல் காணமுடியும். மரபு இலக்கணங்களில் இது சாத்தியமில்லை என்கிறார் இன்னொருவர். 'நான் இலக்கணம் படிக்காதவன் என்பதனால், நான் கலைஞனல்லவென்று உங்கள் சட்டத்தால் முடிவுகட்டிவிட முடியாது. கலைப்பிரக்ஞையுடன் என் மனம் உணரும் இனமறியாத ஆழ்ந்த உணர்வுகளுக்கு 'மொழியும், மௌனமும்' கலந்த உருவம் கொடுக்க முயல்கிறேன் நான்—இதனால் எனக்கு விடுதலையும் உயர்வான ஆனந்தமும் நேருகிறது. இந்தச் சுதந்ரம் தான் புதுக்கவிதை'' என்கிறார் மற்றொருவர். இன்றைய "Modern Noises"தான் இந்தக் கவிதைகளை அவசியமாக்குகிறது என்கிறார் ஒரு சக கவிஞர்.

இப்படியாக, பற்பல வித்யாசமான, ஆனால் நேர்மையான இலக்கிய குணரூபங்களாகப் புதுக்கவிதையை நியாயப்படுத்துவது மட்டும் நமக்குப் போதாதென்று நினைக்கிறேன். இவைகளைச் சிறப்பாக நிரூபிக்கக் கவிதைகள் தான் இன்று தேவை.

சங்க இலக்கியங்களிலிருந்து, கம்பனிலிருந்து, ஆழ்வார் நாயன்மார் பாடல்களிலிருந்து, சிவவாக்கியர்வரிகளிலிருந்து, இன்னும் ஞானக்கூத்தன், பாலகுமாரன், கலாப்ரியா, வைதீஸ்வரன் படைப்புகளிலிருந்தும் 'கவிதைகள்' எவை என்று நம்மால் கண்டுபிடிக்க முடிகிறது. ஆனால் விநோதமாக, இவைகள் கவிதைகள் என்ற புல்லரிப்பான அனுபவத்திற்குப் பிறகுதான், இவைகளின் குணரூப இலக்கணங்கள் நமக்குத் தென்பட ஆரம்பிக்கின்றன.

வாழ்வை 'தன்னையிழந்து' நோக்கும் போது ஒரு கவி மனத்தில் இததகைய அனுபவப் புலரிப்புகள், எததனையோ நேருகின்றன. அவைகளைக் கவிதையாக இனங்கண்டு கொள்வதும், அதை ''மொழியால் மொழிபெயர்த்து கவிதை பண்ணுவதும் மனித பிரயத்தனம் கூடிய காரியம் தான்.

இந்த கலைப் பிரயத்தனத்தில், நமக்குத் தெரியாத பல பிரக்ஞை உணர்வுகளை, நமக்குத் தெரிந்த மொழி விளக்குகளால் வெளிச்சமிட்டுத் தேடும் தேடலில்தான், கவிஞனுக்குப் புதிய ஆச்சரியங்கள் கிடைக்கின்றன.

சமீபத்தில் நான் ஒரு யாகசாலையில், வேத கோஷங்களின் மததியில் அமர்ந்து

கொண்டிருந்தேன். அது ஒரு அருமையான உணர்வு அனுபவம். உயிர் கலந்த அந்த கோஷங்களில், மனம் ஒன்றிக் கிடந்தபோது, அதன் சப்த அணுக்கள் துடிக்கும் உச்ச நிலைகளில், கேட்கும் நானும், உச்சரிக்கும் புரோகிதர்களும் வித்யாசமற்றுக் கரைந்து போனோம். தூய்மையான உயிரின் நாத வியாபகம் மட்டுமே எங்கும் நிரம்பிக் கிடந்ததாகத் தோன்றியது. நட்பின் மூல காரண காரியங்கள் மறைந்து, சப்தத்தின் லயங்கள் கிளம்புவது எனக்கு உள்ளிருந்தா, வெளியிலிருந்தாவென நிச்சயிக்க முடியாத தடுமாற்றம் ஏற்பட்டது ஒரே கணத்தில் இரண்டு வெவ்வேறு பிறவிகளில் வாழ்ந்து, வெவ்வேறு நூற்றாண்டுகளில் கால்வைத்துக் கொண்டிருந்தேன். பலலாயிரம் ஆண்டுகளுக்கு முன்னால், பேய்களையும், மிருகங்களையும் ஓட்டிய என் முன்னோர் குரல்களும், இன்று தன் அங்கங்களையே சங்கீதக் கருவியாக இசைத்து உருக்கிப் பாடும் wood stock ஹிப்பிகளின் குரல்களும் சேர்ந்தும், மாறிமாறியும் என் உள் மனத்தில் எதிரொலிகள் செய்தன. இந்த சப்தச் சேர்க்கைகளின், நிர்மாணங்களின் அடிப்படை வலிமையைப் புதிதாக உணர்ந்து வியந்தேன்.

எனக்குள் நேர்ந்த இந்த நிகழ்ச்சி, ஸ்தூலமாகப்பொருள் சொல்லக்கூடியகவிதையாக எப்படி மாறும் என்று எனக்கு இப்போது தெரியாது. ஆனால் அந்த அனுபவத்தின் உண்மை என் ரத்தத்தில் என் பிரக்ஞையில் கலந்துகொண்டிருப்பதை நான் உணர்வேன். அந்த உண்மையின் வெளிப்பாடு கவிதையாகத்தான் ஜனிக்கும் என்பது எனக்குத் தெரிகிறது.

இன்றைய, ஆசை காட்டக்கூடிய புறச் சூழ்நிலைகளில், இத்தகைய அனுபவ உண்மைகளைத் தேடுவதில் அக்கறை குறைந்துவிடக் கூடும். இவ்வாறு அக்கறை குறைந்தவர்கள் நிறைந்து விடாமல் இருந்தால்தான் தமிழ்க் கவிதைகள் இன்னும் வாழும். ●

---



## நீ*

கவிதையின்பால் தமிழ்ச் சமூகத்தின் கவனம் இன்று திரும்பியிருக்கிறது; திருப்பப் பட்டிருக்கிறது. எல்லாவிதமான முயற்சிகளாலும் அக்கவனத்தை நிலை நிறுத்த இறங்கியிருக்கிறார்கள் தமிழ்க் கவிஞர்கள் என்பது இன்று எழுதப்படும் கவிதைகளிலிருந்து தெரிகிறது இதுவரை காணாத இலக்குகள் நோக்கங்கள், சார்புகள் இன்று தமிழிலக்கியம் காணத் தொடங்கிவிட்டது. தமிழ்க் கவிதையின் வளர்ச்சியை நம்பிக்கைக்குரியதாகச் செய்கின்றன தமிழ்வாசகர்கள், எழுதுபவர்கள், கவிதைகள் வெளியிடும் ஏடுகளின் அண்மைக் காலவளர்ச்சி வேறு வேறு இலக்குகள், சார்புகள் நோக்கங்கள் தமிழ்க் கவிதையின் சிந்தனைக்கு அடித்தளமாக அமைவதைக் காணும்போது இந்த நம்பிக்கை இன்னும் ஆழமாக உறுதிப்படுகிறது.

சென்ற சிலமாதங்களில் வெளிவந்த சிறு தொகுப்புகள்: "புள்ளி", "வெள்ளம்". இப்போது "நீ". இன்னும் சில வெளிவர இருக்கின்றன என்று தெரியவருகிறது. கவிதையின்பால் தமிழ் வாசகர்களை, தமிழ் சமூகத்தை ஈர்ப்பதே இச் சிறு தொகுப்புகளின் பெரிய வெற்றி.

வானம்பாடிக் கவிஞர்களால் வெளியிடப்பட்டுள்ளது "நீ" என்ற சிறுகவிதைத் தொகுப்பு. வானம்பாடிக் கவிஞர்களின் இலட்சியம் மார்க்ஸியக் கண்ணோட்டக் கவிதைகளினால் சமுதாயத்தை சீரமைப்பது. சி. சுப்பிரமணிய பாரதியார் தோன்றிய மண்ணில் வானம்பாடிக் கவிஞர்கள் தோன்றுவது முறையல்லவென்று யாரால் சொல்லமுடியும்? எந்த இலட்சியந்தான் சிறப்பான இலட்சியம் இல்லை? இலட்சியத்திற்கும், செயலுக்கும் உள்ள இடைவெளியே முயற்சிகளின் வெற்றி தோல்வியைக் கணித்து விடுகிறது.

வானம்பாடிக் கவிஞர்களின் சிறுகவிதைத் தொகுப்பான "நீ"யை ஆராய்ந்தால், சில நம்பிக்கைகளைத் தரும் தோல்விகளையே காண நேர்கிறது. இந்தத் தொகுப்புதரும் ஒருமித்த எண்ணம், இக் கவிஞர்களிடத்தில் கவிதையும் உண்டு, இலட்சியமும் உண்டு, ஆனால், (இந்த 'ஆனால்' மிகவும் வருந்தச் செய்யும் ஒரு பெரிய 'ஆனால்') இலட்சியமே கவிதையாவதில்லையென்று.

ஆழ்ந்த சிந்தனையுள்ள ஞானி, அவரது சிந்தனை கவிதையாக்கும்போது, சிந்தனை

---

* நீ (சிறு கவிதைத் தொகுப்பு)
தொகுத்தவர் : பாலா, தமிழ்நாடன்
for private circulation
வெளியீடு: இலக்கியவட்டம்
79 திருவள்ளுவர்சாலை
ராசிபுரம்—637408

கவிதை வேறு, சிந்தனை வேருகப் பிரிந்து விடுகிறது. கவிதையாக முயலும் சிந்தனை காலற்றுச் சாய்ந்து விடுகிறது. ஊரையே ஆக்ரமித்த தலைவனிடம் ஞானி முறையிடுவது அவனது மாடுகள் அவரது தோட்டத்தை மேய்வதற்காக. அக்னிபுத்திரனின் தார்மீக ஆவேசம், அவரது வழக்கத்திற்கு மாருக அழுத்தமாக, அமைதியாக வெளிக்கொணரும் "பட்டமரம்" கவிதையாக மாறுகிறதில்லை. கவிஜோதியின் கோபமான "ஒரு குரல்" தூண்டுதலற்ற முணுமுணுப்பாகி விடுகிறது. அப்துல் ரகுமானின் "திட்டங்கள்" அழகாக, இறுக்கமாக வந்திருக்கிறதென்ருல், அவரது "சுட்டபழம்" பாலகுமாரனின் விட்டில்களை நினைவூட்டிக் களையிழந்து நிற்கிறது. ஏ.ஜி, "நடைமுறை"யில் மிகவும் கொச்சையாக "கர்ணகி" யென்று புதுசொல்லடிக்கிருர். கைதியும், சிற்பியும் பெயர்வைக்கத் தெரியும், தெரியாதென்று குழம்பி யிருக்கிருர்கள். "அறிவுரை"யும் "அறிவுரைக்கு ஒரு அறிவுரை"யும், இதே போன்ற (ஒரு போட்டி? ஒரு விளையாட்டு?) குழப்பத்திற்கு ஆளாகின்றன. மு. மேத்தாவின் "அரளி" ஒரு பாரம்பர்யமான, அழகான சில அசைவுகளையும், ஓட்டத்தையும் மட்டும் தந்துவிட்டு முழுமையாகாமல் மறைந்து விடுகிறது. "வெறுமை"யைப் புவியரசு உணர்த்துகிருர். ஒரு பலமற்ற படிமத்தின் வழியாக தேரைசனின் இயலாமை "ஆதிவாசி"களாக உருவாகியிருக்கின்றது. தமிழவனின் "திருப்தி" எடுப்பாக ஆனல் கனமற்று விழுகிறது.

மணிமொழியின் இரண்டு கவிதைகள். பசியையும், பசியினல் பாழாவதையும் அருமையாகச் சித்தரிக்கும் கவிதை "கீதா உபதேசம்" நாட்டின் மீது உள்ள நம்பிக்கை தளர்வதை வெளியிடுகிறது, "எங்கள் இந்தியா" இறுக்கமும், சிக்கனமும் இங்கு தேவை.

இத் தொகுப்பிலேயே சிறந்த கவிதையாக வெளி வந்திருப்பது கங்கைகொண்டானின் "நினைவுகள்". இலட்சியத்தின் ஒளியில் இன்றையநிலை காணப்பட்டுக்கலையாக உருவாகும் போது கிடைக்கும் கவிதைகளில் ஒன்று கவிதை கூச்சல்களையோ, கோஷங்களையோ எழுப்புவதில்லை. கவிதையெழுப்புவதெல்லாம் உள்ளதீர்வுகள் மட்டுமே; அவ் உள்ளதீர்வுகள் கவிதையைக்கலையாக ஆக்குபவை. எந்தக் கவிஞனும், இலட்சியத்தோடுதான் எழுதுகிருன். இலட்சியங்கள், தன்ளுேடு இயைந்து வேறுபாடற்று கலந்துருகி, பின் பிரிக்க இயலாது உருவாகும்போது கவிதைகள் பிறந்து விடுகின்றன. வளர்ச்சி கொண்ட எந்தக் கவிஞனும் இந்த அனுபவத்திலிருந்து தப்பியதில்லை; இந்த அனுபவம் கவிஞனுக்குத் தன்னம்பிக்கையும், அடக்கத்தையும தராமல் போவதில்லை. எழுதித்தான் தன்னைக் கண்டு கொள்கிருன் கவிஞன். "நினைவுகள்" கங்கை கொண்டானுக்கு இத்தகைய அனுபவத்தைத் தந்திருக்கவேண்டும்.

அச்சிலும், உருவ அமைப்பிலும் சிறப்பாக 'வானம்பாடி' இதழைக்கொண்டுவரும் கவிஞர்கள் இந்தச் சிறு கவிதைத் தொகுப்பையும் சிறப்பாகக்கொண்டு வந்திருக்கிருர்கள். இந்த சிறப்பான பதிப்பைப் பார்க்கையில், இந்தக் கவிஞர்கள் இன்னும் சிறப்பான, செழிப்பான கவிதைகளைத் தமிழுக்குத் தருவார்கள் என்ற ஆசை எழுகிறது.

—பதி


## FORM IV
(See Rule 8)

| | | | |
|---|---|---|---|
| 1 | Place of publication | ... | No. 1 Devadi Street, Madras 4 |
| 2 | Periodicity of its publication | ... | Monthly |
| 3 | Printer's Name | ... | M. K. Swamy |
| | Whether citizen of India? | ... | Yes |
| | Address | ... | 8 Mundakakanni Amman Koil Street Madras 4 |
| 4 | Publisher's Name | ... | N. Mahaganapathy |
| | Whether citizen of India? | ... | Yes |
| | Address | ... | 47 Nallathambi Mudali Street Madras 5 |
| 5 | Editor's Name | ... | N. Krishnamurthy |
| | Whether citizen of India? | ... | Yes |
| | Address | ... | 1 Devadi Street Madras 4 |
| 6 | Names and addresses of individuals who own the newspaper and partners or shareholders holding more than one per cent of the total capital | ... | N. Mahaganapathy 47 Nallathambi Mudali Street Madras 5 |

I, N. Mahaganapathy, hereby declare that the particulars given above are true to the best of my knowledge and belief.

Sd/- N. MAHAGANAPATHY
Dated: 1-3-73 Publisher